# தென்மொழி

திங்கள் இதழ்

ஆசிரியர்: புலவர் செ. இராசு

புரட்டாசி 2002] 25 காசு [செப்டம்பர் 1971





ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை.

அறிவியல் வரலாற்றுத் திங்களிதழ்

# கொங்கு

சேவலங் கொடியோன் காப்ப
ஏமவைகல் எய்தின் றால்—உலகே.

தேனடை 1 15—9—71 தேனி 9

## வணக்கம்

செப்டம்பர் திங்கள் தமிழ் நாட்டில் மிகப் பெரிய மாதம். எப்படி என்கிறீர்களா? பெருந்தலைவர்கள் பலரை இந்த மாதத்தில் நினைத்துக் கொள்கிறோம்.

*டாக்டர் சர்வபள்ளி இராதாகிருஷ்ணன்,*
*டாக்டர் சி. என். அண்ணாதுரை,*
*தந்தை ஈ. வெ. இராமசாமிப் பெரியார்.*
*கவி சுப்பிரமணிய பாரதியார்*
*கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரம் பிள்ளை*

செப்டம்பர் மாதத்தில் பிறந்தவர்கள் இவர்களைப் போன்று திகழ முயல்வார்களாக.

நடுவன் அரசுத் திட்ட அமைச்சர் பாராளு மன்றத் தேர்தலில் வெற்றி பெற்றுள்ளார். அனைத்துக் கட்சிகளும் ஆதரித்த போதிலும், தேர்தல் நடந்தே ஆகவேண்டிய நிலை ஏற்பட்டதே, அது தான் மக்களாட்சியின் வேடிக்கையான அம்சம்.

திருக்கோயில் நூலகங்களுக்கு வாங்குவதற்கு இந்து அறநிலைய ஆணையாளர் ஆணையிட்டுள்ளார்கள். கோயிலுக்குச் செல்லும் அன்பர்கள், கோயில் செயலதிகாரிகளையும், அறங்காவலர்களையும். சந்தா அனுப்ப வேண்டுவதன் மூலம் ஒரு நல்ல பணி செய்யலாம்.

பள்ளி, கல்லூரிகளுக்கு வாங்குவதற்கு, அந்தந்த இயக்குநர்களின் அனுமதி தேவையில்லை; தலைமை ஆசிரியர்களும், கல்லூரி முதல்வர்களுமே வாங்கலாம் என பள்ளி, கல்லூரி இயக்குநர்கள் பதில் அனுப்பியுள்ளனர். இது பற்றிப் பல ஆசிரியர்கள் எமக்கு எழுதிக் கேட்டுள்ளனர். எனவே ஆசிரியர்கள் முயன்று தத்தம் தலைவர்களுக்கும், முதல்வர்களுக்கும் பரிந்துரை செய்ய வேண்டுகிறோம்.

கொங்கு தனது ஒன்பதாவது திங்களை அடைந்து விட்டது. சந்தா மூலமாகவும், கடைகளிலும் அது பெற்றுள்ள வரவேற்பை கண்ணுற்ற போது, அறிவியல் ஏடுகள் படிக்குமளவுக்கு தமிழகத்து மக்களின் வாழ்க்கைத் தரம் (பொருளாதார நிலையில் தான்) உயரவில்லை என அறிந்து கொண்டோம். கொங்கு வாசகர்கள் அறிவுத்தரத்தில் மேல்மட்டம் எனவும் தெரிந்து கொண்டோம்.

—ஆசிரியர்.

# மணம் கமழும் மண் கின்னம்

புலவர் செங்கைப் பொதுவன் M. A., B. T.,

கோவை மாவட்டம், தாராபுரம் வட்டம் இடையே பழமையான நத்தம் ஒன்று உள்ளது. அத்னை உழும் போது கற்பாறைகள் சில தட்டுப்பட்டன. பாறையைத் தோண்டி எடுக்கையில் அதன் அடியில் பெரும் பெரும் தாழிகள் இருந்தன. மேலும் வயலைப் பண்படுத்தும் போதும் நீரேற்றுக் குழாய்கள் பதிக்க வாய்க்கால்கள் வெட்டும் போதும் பல பழமையான தாழிகள் கிடைத்தன. ஆன்பொருநை என்னும் அமராவதி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது, இந்த நத்தம்.

தாழியின் உள்ளிருந்து கிடைத்த பொருள்கள் புலவர் ந. சு. மணியன் வழி சேமித்து வைக்கப்பட்டன. அவற்றுள் அடியில் கண்ட 7 பொருள்கள் தமிழ் நாடு தொல்லியல் துறை இயக்குநர் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன.

அவை :

1. மல்லிகை மணம் கமழும் மண் பாண்டம்
2. பகுவாய்க் கன்னல் (Drinking cup)
3. மண்கலயம்
4. மண் கல மூடி
5. கலவ்டை
6. விளக்கு மூடி
7. பகுவாய்க் கலைக்கன்னல்

இவை போன்றவற்றின் உடைந்த ஓடுகளை ஒப்பிட்டு நோக்கி இவை கிறித்துவுக்கு முற்பட்டவை என்று கூறலாம். சில பாண்டங்கள் உரோமானிய பாண்டங்களைப் போல் தமிழகத்தில் செய்யப்பட்டவைகளாகத் தோன்றுகிறது. அப்பாண்டங்களில் கண்டெடுக்கப்பட்ட செந்நிற மணி ஒன்றும் இக்காலத்தை உறுதி செய்வது போல் உள்ளது.

தாழிகளில் சிலவற்றில் எலும்புத்துண்டுகளும் செம்புத் துண்டுகளும் கிடைத்தன என்று கூறப்படுகின்றது. இரும்புத் துண்டுகள் யாதும் கிடைக்கவில்லை என்றும் கூறப்படுகிறது.

மேலே காட்டியவை சிறு சிறு மண்பாண்டங்களாகும். அவை அனைத்தும் பற்பல பெருந்தாழிகளின் உள்ளே இருந்து கிடைத்தவை. அவற்றுள் ஒன்றே கண்டோர் வியக்கும் கிண்ணம்; மல்லிகைப் பூவின் மணம் கமழும் கிண்ணம்; பல நூற்றாண்டுகளாக மணம் மாறாத கிண்ணம்.

வயது முதிர்ச்சியால் உணவும் செல்லாமல் உயிரும் போகாமல் இருக்கும் மூத்தோரை-அவரே விரும்பிக் கேட்டுக் கொண்டதன் பேரில் அவரைப் பெருந்தாழியில் உயிருடன் அமர்த்தி மூடி மண்ணில் புதைத்து விடுவது நம் நாட்டில் இருந்து வந்த பழக்கங்களில் ஒன்றாகும். இவ்வாறு புதைக்கையில் அவருடன் விளக்கு, உணவு, நீர் முதலியனவும், அவர் பயன்படுத்திய பாண்டங்களில் அவர் விரும்பிக் கேட்டனவும் உடன் வைத்துப் புதைத்து விடுவதும் வழக்கம்

ஒப்பனைச் சாதனங்களைப் பற்றி சீவகசிந்தாமணி விளக்கம் தருகிறது "வாசவெண்ணெயும் வண்டிமிர் சாந்தமும் பூசு சுண்ணமும்" (சிவக சிந்தாமணி 864) "இன்முக வாசுச் செப்பு" (சீ. சி போன்ற வரிகள் தற்கால snow, scent, powder ஆகியவற்றை நினைவூட்டுகின்றனவல்லவா ? உள் வைத்துப் புதைக்கப்பட்டவைகளில் இத்தகைய பொருள்கள் இருந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது.

"தொகுவாய்க் கன்னலில், தண்ணீர் உண்ணார்,
பகுவாய்த் தடவில் செந்நெருப்பார" (நெடுகலவாடை)

என்ற சொற்றொடருக்கேற்ப பிற ஏனங்கள் உள்ளன.

---

## ELECTRCITY

கிரேக்கர்கள் நிலத்தைத் தோண்டுகையில் மஞ்சள் நிறமானதும் கண்ணாடி போன்றதுமான சில கற்களைக் கண்டெடுத்தனர். இவைகள் ஒரு காலத்தில் புதையுண்ட பர் (fir), பைன் (Pine) மரங்களின் பிசினாகும், இதனையும் புதையுண்ட மரப்பிசின் (Amber=A yellow translucent fossil resin. எனலாம்.

இதன் கிரேக்கப் பெயர் எலக்ட்ரான் (Elektrom) என்பதாகும் கி.மு. 600 இல் கிரேக்க அறிஞர், தேஸ்சு இப்புதை மரப்பிசினில் சில ஆராய்ச்சிகள் செய்தார். இப்புதை மரப்பிசின் ஒரு பட்டுத் துணியில் தேய்த்த பின். தூசு, வைக்கோல் துணுக்கு போன்றவற்றைக் கவரும் தன்மை பெறுவதைக் கண்டார். இத்தன்மையை Electricity, என்றனர். இப்புதைபிசினின் கிரேத்கச் சொல்லான Elektron, என்னும் சொல்லிருந்துதான் "Electricity" என்னும் சொல்லும் வழக்கிற்கு வந்தது,

இரா. கணேசன்

# குளு குளு வசதி

அ. இரா. இராமராசு M. Sc., D. S. S.

நாம் நினைப்பது போல் ஏர்கண்டிஷன் (காற்று பதம்) என்பது நான்கு சுவர்களுக்குள் இருக்கும் காற்றின் வெப்பநிலையைக் குறைப்பது மட்டுமல்ல, காலத்திற்கேற்ப காற்றின் வெப்பநிலையை உயர்த்துதலும், குறைத்தலும், காற்றில் உள்ள ஈரத் தன்மை, காற்றோட்டம், காற்றின் மணம், காற்றிலுள்ள தூசிகள் நுண் அணுக்கள், வெளிச்சம், காற்றின் அழுத்தம், அயனிகளின் அளவு ஆகிய இன்னோரன்ன பலவற்றையும் கட்டுப் படுத்தி ஒரு இதமான சூழ்நிலையை உண்டாக்குவதே காற்றுப்பதம் என்பதாகும்.

இதமான சூழ்நிலையை உண்டாக்கத் தேவைபடுபவை.

(1) காற்றின் வெப்பநிலை 75° 77° F. வரை இருத்தல் வேண்டும்.

(2) காற்றின் ஈரத்தன்மை (Relative humidity) 60 முதல் 65 விழுக்காடு வரை இருக்க வேண்டும்.

(3) காற்றோட்டம் நிமிடத்திற்கு 25 முதல் 75 அடி வரை இருந்தால் நல்லது.

(4) 25 விழுக்காடு காற்று சுத்தமாக இருக்கவேண்டும்.

(5) காற்றில் நறுமணம் இருக்க வேண்டும்.

இதமான சூழ்நிலையைப் பெறக் குளிர் நிறைந்த நாடுகளில் காற்றை வெப்பப்படுத்துவார்கள். ஆனல் நம் நாட்டைப் போன்றுள்ள வெப்பம் நிறைந்த நாடுகளில் காற்றைக் குளிரச் செய்து பதப் படுத்துகிறார்கள் திரவக் குளிர் பதனிகளாகிய ப்ரியான் (Freon) சல்பர்-டை ஆக்ஸைடு (Sulpur-di-oxide) ஆகியவற்றில் ஒன்றை ஆவியாக்கி அதை வேண்டிய அளவுக்குக் குளிர வைத்து அதைச் செப்புக் குழாய்களின் வழியே பாய்ச்சி அறைக்குள் செலுத்தி அறையை குளிர வைக்கிறார்கள்.

காற்றுப் பதப் பொறி எடுத்துக் கொண்டு அதன் பல் வேறு உறுப்புக்கள் எவ்வாறு வேலே செய்கின்றன, இதமான சூழ் நிலையை அது எவ்வாறு உண்டாக்குகிறது என்பனவற்றைப் பார்ப் போம். காற்றுப் பதக் கருவி ஒரு சிறிய உலோகப் பெட்டியில்

அடங்கிவிடும். நாம் அதை வாங்கிச் சுவரில் பொருத்தி வைத்து மின்சார இணைப்பையும், கொடுத்து விட்டால் போதும் காற்றைச் குளிரச் செய்து ஒரு குழாய் வழியே அனுப்பும் புதிய காற்று இக் குழாய்களின் மேல் பட்டுக் குளிர்ந்து விடும். படத்தில் காட்டியுள்ளபடி வெளிப் புறக் காற்றும் அறையிலிருந்து வெளி வந்த காற்றும் சேர்ந்து உள்ளே செல்கின்றன.



முதலில் நுண்சல்லடை போன்ற அமைப்புள்ள வடிகட்டியின் வழியே உள்ளே செல்கிறது. இவ்வடிக்கட்டி தூசிகள், புகைக்கரி பாக்டீரியா, வைரஸ் (virus) முதலியவைகளை நீக்கிவிடுகிறது இக்காலத்தில் கண்ணுக்குப் புலப்படாத சிறிய அளவு தூசிகளை நீக்கக் கூட எலக்ட்ரானிக் முறையில் காற்றை சுத்தமாக்கும் கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. இதன் பிறகும் உள்ளே செல்லும் தூசிகள் தெளிக்கப்படும் நீர்த் திவலைகளில் ஒட்டிக் கொண்டு வெளியே சென்றுவிடும். இன்னும் ஏதாவது பாக்டீரியா வைரஸ் ஆகியவை இருந்தால் பாதரஸ ஒளி அவற்றின் மீது பாய்ச்சப்படுவதால் இறந்து விடும் சில பாக்டீரியாக்கள் காற்றுக்கு கெட்ட மணதைக் கொடுக்கும். நச்சுக் கொல்லி, மருந்து மூலம் அவை கொல்லப்படுகின்றன. இவ்விதத்தில் காற்று தூய்மைப் படுத்தப்படுகிறது. அதன் பிறகு காற்றின் ஈரத்தன்மையை விருப்பத்திற்கேற்றபடி கூட்டவோ, குறைக்கவோ வேண்டும் வெய்யில் காலத்தில் காற்றை மிகுதியும் குளிர வைக்கவேண்டும் குளிர் காலத்தில் காற்றை மிகுதியும் வெளிப்படுத்த வேண்டும் இதற்குக் குளிர்ச் சுருளின் மீதோ, வெப்பச் சுருளின் மீதோ படும்படிச் செய்ய வேண்டும் குளிர் சுருள், குளிர் பதன முறையில் (Refrigeration) குளிர்ச்சியாக வைக்கப்பட்டுள்ளது. மின்தடைக் கம்பியினால் ஆக்கப்பட்ட வெப்பச் சுருளில் மின்சாரம் பாய் வதால் வெப்பம் உண்டாக்கப்படுகிறது. இவ்வாறு தேவையான தொன்றைக் காலத்திற்கேற்ப, பயன்படுத்திக் கொள்ளலாம் அதன்பின் காற்றுக்கு நறுமணம் சேர்க்க, ஆவியாகக் கூடிய

நறுமணக் கலவைகளை (Cosmetics) வைத்துள்ளார்கள். அதன் பிறகு காற்று அறையினுள் செலுத்தப்படுகிறது. இதற்கு ஒரு விசிறி பயன்படுகிறது.

காற்று பதக் கட்டுப்பாடு [Airconditioning] சாதனத்தின் திறன், அளவு முதலியவைகளைத் தீர்மானிக்கக் கீழ்வரும் முக்கிய மானவற்றைக் கவனித்தல் வேண்டும் ஏர்கண்டிஷன் செய்யப் போகும் அறையின் அளவு முதலியவைகளையும், வெப்பச்சுமை சூரியனுல் அறையில் ஏற்படும் வெப்பம், அறையில் தங்குபவர்களும் அவர்களின் எண்ணிக்கையும், தங்கும் நேரம் அவர்கள் செய்யும் தொழிலின் தன்மை, மின்விளக்கு காற்றுடி மற்றுமுள்ள மின்சார சாதனங்களால் உண்டாகும் வெப்பம், அருந்தக் கூடிய சூடான பானங்கள், சாப்பிடக் கூடிய உணவு ஆகியவற்ருல் பெறப்படும் வெப்பம் முதலியவற்றையும் கணக்கிடல் வேண்டும். சராசரி ஒருவருக்கு ஒரு நிமிடத்திற்கு 20 கன அடி சாதாரணக் காற்றும், 20 கன அடி பதம் செய்யப் பட்ட காற்றும் தேவைப்படுகின்றன. அங்காடிகள் உணவு விடுதிகள், மாணவரில்லங்கள், வகுப்பறைகள், திரை அரங்குகள், ஆகிய வற்றிற்கு வெப்பச் சுமை கண்டு பிடிக்க நெடு நாளைய புள்ளி விவரக் கணக்கெடுத்துச் சரிபார்க்க வேண்டும். இதைவிட பேருந்து வண்டிகள், புகைவண்டி, வானவூர்தி, கப்பல் ஆகியவற்றில் வெப்பச் சுமை அடிக்கடி மாறும். ஏனெனில் அடிக்கடி நிறுத்தப்பட்டு பலர் ஏறவும், இறங்கவும் செய்வதால் வெப்ப சுமை மாறிக் கொண்டே இருக்கும். பேருந்து வண்டிகளில் பொருத்தப்படும் இச்சாதனங்கள் ஆட்டத்தினுல் கரடு முரடான ஒலியையும் இரைச்சலையும் உண்டு பண்ணுமல் பாதுகாப்பது நல்லது.

திரை அரங்குகளில் சராசரி, ஒரு புகை பிடிக்கும் மனிதனுக்கு ஒரு நிமிடத்திற்கு 6. 25 கன அடி வெளிப் புறக் காற்றும், புகை பிடிக்காமலிருப்பவர்களுக்கு 5-00 கன அடி காற்றும் தேவைப் படுகிறது. ஒவ்வொரு ஆணும், பெண்ணும், குழந்தையும் முறையே 400, 350, 270, பிரிட்டிஷ் தெர்மல் யூனிட் வெப்பத்தை வெளி யிடுகிருர்கள் சுமார் 15 முதல் 20 பேர் உட்காருமிடங்களுக்கு ஒரு டன் குளிர் பதனம் (Refrigeration) தேவைப்படுகிறது.

பல தொழில் கூடங்களிலும் இச்சாதனம் மிக இன்றி யமையாத தொன்ருகி விட்டது. நெசவு ஆலைகள், பருத்தி ஆலைகள் முதலியவற்றில் நூலின் தரம் சிறக்க இதனைப் பெரிதும் பயன் படுத்துகிருர்கள். இத்தகைய சூழ்நிலை கோயம்புத்தூரில் இயற் கையிலேயே அமைந்து உள்ளதால் பருத்தி ஆலை, நெசவாலைத் தொழில்கள் நன்கு வளர்ந்துள்ளன. சில ஆய்வுக் கூடங்கள் ஆடிகள் தேய்த்தல், மருந்து தயாரித்தல், அச்சு வேலை, உணவுப்

பொருள்கள் பராமரிப்பு, சுரங்கத் தொழில், ஆகியவற்றிற்கும் ஏர்கண்டிஷன் மிக இன்றியமையாத தொன்றாகி விட்டது. பல தொழில் நிறுவனங்கள் தங்கள் ஊழியர்களை நல்ல வசதியோடு கூடிய ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட அறையில் தொழில் புரியு மாறு பணித்து அவர்களால் முழுப் பயனையும் பெற்று உற் பத்தியைப் பன்மடங்கு பெருக்குகிறார்கள்.

காற்றுப் பதப் பொறியின் விலைதான் ஏழைகளின் கைக்கு இன்னும் எட்டவில்லை. அவற்றின் உற்பத்தி பெருகப் பெருக அதுவும் மலிந்து விடும். வீட்டில் மின் விளக்குப் போல அதுவும் இன்றியமையாத் தேவையாகும் நாள் அதிகத் தொலைவில் இல்லை. * *

---

## விளக்கணம்பூண்டி ஈசுவரர் கோவில்

திருத்தணிக்கு அருகில் விளக்கணம் பூண்டி என்ற ஊரில் கோயில் ஒன்றை தமிழ்நாடு அரசு தோல் பொருள் ஆய்வுத்துறை பழுது பார்த்தது. அப்போது வரலாற்று சிறப்புள்ள கல்வெட்டு களை அது கண்டு பிடித்திருக்கிறது. இக்கல்வெட்டுகளில் ஒன்று இப் பகுதியை 9 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆண்ட வாண மன்னனுடையது. மகாபலி குலத்தைச் சேர்ந்த பான அரசன் விஜயா நித்ய வாணராயன் என்பவருடைய ஆட்சியில், அவனுடைய அதிகாரி அரியூர் கிழவன் என்பவன் இவ்வூர் கோயிலுக்கு திருவமு துக்கும் விளக்குக்கும் நிதி கொடுத்ததை இக்கல்வெட்டு குறிக்கிறது இதிலிருந்து இக்கோயில் 10 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது எனத் தெளிவாகிறது.

தெலுங்கு சோழ மன்னன் விஜயாலய சோழன் என்பானு டைய ஆட்சியில், இக்கோயில் தூங்கா விளக்கைப் பராமரிக்க வியாபாரி ஒருவர் பொருள் அளித்ததை மற்றோர் கல்வெட்டு குறிக்கிறது. இக்கோயில் விஜயாலீஸ்வரம் என்று குறிக்கப்பட்டு இந்த கல்வெட்டுகளில் பிற்கால விஜயநகர மன்னன் இரண்டாம் புக்கன் காலத்திய கல்வெட்டு ஒன்று இக்கோயிலை விஜாலய சோளீஸ்வரம் என்று குறிக்கிறது. 9 ஆம் நூற்றாண்டில் தஞ்சையில் சோழப் பேரரசை நிறுத்தியவன் விஜயாலய சோழன் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

திருத்தணிக்கு அருகில் உள்ள இக்கோயில் விஜயாலய சோழ னாலோ அல்லது அவனுக்கு கீழ்ப்படிந்த ஒருவனாலோ அவன் பெயரால் கட்டப்பட்டுள்ளது என்பது இதனால் தெளிவாகிறது. விஜயாலயனுக்கும் இப்பகுதிக்கும் உள்ள தொடர்பை இக்கல் வெட்டு கள் தெளிவாக குறிக்கின்றன

# நிலவென்னும் நல்லாள் நகும்!

கே. எஸ். மகாதேவன் B. Sc ,M.A.

*நிலவுப் பயணம் நல்லதல்ல என்று மூதறிஞர் ராசகோபாலாச்சாரியார் கருத்துரைத்துள்ளதை நேயர்கள் அறிவர். கல்வித்தரம் எவ்வளவு இருந்தாலும் மதவாதிகள் அறிவியல் சாதனைகளை எதிர்ப்பது என்பது என்றும் தீராது.*

*—ஆசிரியர்*

திங்களில் மனிதர்கள் சென்று அடி வைத்துத் திரும்பும் செய்தியைக் கேட்கும் போதெல்லாம் நாம் தேவர்களினும் மிகுதியாக மகிழ்ச்சி கொள்கின்றோம். அன்னமாகப் பறந்த பிரம்ம தேவன் கதையும், அந்தரத்தில் தொங்கும் திரிசங்கு மன்னனின் கதையும் பழங்காலத்து மக்கள் உள்ளத்திலேயே விண்வெளிச்செலவு பற்றிய ஆர்வம் முகிழ்த்துவிட்டது என்பதைக் காட்டுகின்றன. விண்வெளி பற்றிய ஆராய்ச்சி மனிதனது உள்ளத்தைத் தொடர்ந்து விரிவடையச் செய்திருக்கிறது. ஆதிசேடன் தாங்கும் தட்டைப் பூமியிலிருந்தபடி அழுது புலம்பும் மனிதக் குழந்தைகளுக்கு வேடிக்கைக் காட்டவே இறைவன் வானக் கூரையைப் படைத்து அதில் ஞாயிறு, திங்கள், கோள்கள், மீன்கள் போன்ற ஒளிப் பொருள்களைப் படைத்துள்ளான் என்ற 'குண்டு சட்டிக்' கொள் கையிலிருந்தபடி குதிரையோட்டுவோரின் தொகை இன்று குறைந்து விட்டது!

**இன்றைய மனிதன் காண்பவை :** இன்று மனிதன் விரிந்த விண்ணகத்தைக் காண்கின்றான்; உலகங்களையும், உலகங்களால் சூழப்பட்ட ஞாயிறுகளையும், ஞாயிறுகள் திரண்டுள்ள அண்டங்களையும் அவற்றின் தொகுதிகளையும் காண்கின்றான். அவைகள் யாவும் நினைவையும் கடந்த நெடுந்தொலை விற்கப்பாலும் விரிந்து, கிடக்கும் பெருவெளியில் 'இல் நுழை கதிரில்' மிதக்கும் அணுக்களாகச் சுருங்கி விடுவதையும் காண்கின்றான். ஞாயிற்றை அடுத்து மூன்றாவது கோளாக இயங்கும் பூமியில் நின்று கொண்டு நானே எல்லாம்; நான் காலூன்றி நிற்கும் பூமியே விண்ணகத்தின்

நடுமையம்; 'வான் காடதனில் வறிதேசுழலும்' மீன்களெல்லாம் கடவுளர்கள் என்று அன்று பேசியதை இன்று நினைத்து வெட்கப் படுகிறான்! 'இக்கரைக்கு அக்கரை பச்சை' என்ற எண்ணம் அக்கரையில் அடிவைத்ததும் மாறி விடும்! எவரஸ்ட்டு முகட்டில் இருடிகள் இருக்கின்றனர் என்ற கருத்து இல்லேரியும் டென்சிங் கும் அதில் ஏறி அடிவைத்ததும் மறைந்து விட்டது. அவ்வாறே திங்கள் தட்சன் சாபத்தால் தேய்ந்து சிவன் அருளால் வளர்ந்து வரும் தேவன் என்ற கதை ஆம்ஸ்ட்ராங் திங்களில் இறங்கி அடி வைத்த அன்று 'கலையுரைத்த கற்பனையாகி விட்டது'. இவ்வாறு அறிவியல்'பொய்யகல நாளும் புகழ் விளைத்து' வருவது ஏனோ நம் மெய்யறிவாளர் சிலருக்குப் பிடிக்கவில்லை

## இவர்கள் பின்பற்றிய மனிதர்கள்!

இவர்கள் அன்று கலிலியோவின் தொலை நோக்கியைச் சாத்தானின் கருவி என்று பிரச்சாரம் செய்தவர்களைப் பார்க்கிறார்கள். படைப்புத் தொழிலை இறைவனிடமிருந்து பறித்து இயற்கையிடம் கொடுத்து விட்ட டார்வினை இகழ்ந்தவர்களைப் பார்க்கிறார்கள். அலைகடல் தாண்டி அப்பால் சென்றவர்களைச் 'சாதிப்பிரஷ்டம்' செய்த புத்திசாலிகளைப் பார்க்கின்றனர். 'இறைவன் கோவிலில் எண்ணெயின்றி ஒரு விளக்கை எரியச் செய்து விடுவதா? என்று பேசி மின் விளக்குக் கூடாது என்று கூவிய கும்பலைப் பார்க்கின்றனர்'. பூமியின் புனிதத்தைக் கெடுத்து அப்படியே அந்தரத்தில் தூக்கிச் செல்லவே இரும்புத் தண்டவாளங்களிடுகின்றனர்' என்று குரல் கொடுத்த 'பழைய கற்கால' மனிதர்

---

# ஓநாய்

ஓநாய் கோடை காலத்தில் ஊருக்குள் வருவதில்லை. அப்போது எல்லா விலங்குகளும் காட்டில் திரியும். அவற்றை அடித்துத் தின்று பிழைத்துக் கொள்ளும். குளிர் காலத்தில் பிற விலங்குகள் குளிருக்கு அடக்கமாக இரவில் எங்காவது ஒளிந்து கொள்ளும் அதனால் ஓநாய்க்குத் தீனி கிடைக்காது. அதனாலேயே குளிர் காலத்தில் ஊருக்குள் புகுந்து மக்களைத் துரத்துக்கின்றது.

க. பாரி

---

களையும் பார்க்கின்றனர். அவர்களையே தம் வழி காட்டிகளாகக் கொண்டு 'இன்று சந்திரனின் தூய்மையைக் குலைத்துச் சூறை யாடுகிற காரியம் தொடர்ந்து நடை பெற்று வருகிறதே! எவ்வித நோக்கமும் இல்லாமல் அழகிய சந்திரனை இவ்வாறு தாக்கி வருவதை எங்களால் இரசிக்க முடியவில்லையே!' என்று ஓலமிடு கின்றனர். கண்ணப்பன் அடி வைத்து நுழைந்ததால் காளத்தி நாதரின் கர்பக்கிரகம் தூய்மை யிழந்து விடவில்லை, ஆம்ஸ்ட்ராங் அடி வைத்து இறங்கியதால் சந்திரனின் தூய்மை கெட்டு விடுமா? அன்று முப்பட்டை கண்ணாடிக் கொண்டு நியூட்டன் ஞாயிற்றின் கதிர்களை ஏழு நிறங்களாக உடைத்துப் பிரித்ததால் வானவில்லின் அழுகு வாடிவிடவில்லை. அவ்வாறே இன்று இராக்கெட்டுகள் திங்களைத் தொட்டு உறவாடித் திரும்புவதால், அங்கண் வானத்து அட்வுப்பகை அஞ்சித் திங்களும் ஈண்டுத் திரிதரும் கொல்?' என்று புலவர் புகழ்ந்து பாடும் நிலைமை மாறிவிடப் போவதில்லை!

## கற்களை ஆயும் கருவிகள்!

இன்று திங்களுக்கும் பூமிக்கும் இடையில் பண்டமாற்று வாணிபம் தொடங்கி விட்டது. மனிதன் திங்கள் உலகத்துக் கற்களை ஏற்று, பூமியில் உருவான நுட்பமான கருவிகளை அங்கு விட்டு வந்துள்ளான். நம் பூமிபற்றி நாம் அறிய முடியாத பல செய்திகளை அக்கருவிகள் அங்கிருந்தப்படி கண்டு நமக்கு உணர்த்தும்! இன்று நாம் சந்திர கிரகணம் என்று பூமியிலிருந்து தர்ப்பணம் செய்து கொண்டிருக்கும் நேரத்தில் பிடித்தது சந்திர கிரகணம் அன்று சூரியகிரணமே என்று மனிதன் அங்கு விட்டு வந்த அக்கருவிகள் பறைசாற்றுகின்றன!

---

## ஒரு அடி நீள நாக்குள்ள தும்பி

மடகாசுக்கர் தீவில் ஒரு வெள்ளைப் பூ ஒன்றை "கூர்தலறம் (theory of Evolution) எழுதிய சார்லஸ் டார்வின் கண்டார். அதன் தேன் ஒரு அடி நீளமுன்ள பூவின் உட் குழாய்க்குள் இருந்தது. அத்தேனைப் பருகத் தக்க தும்பி ஒன்று இருக்கவேண்டு மென்று 40 ஆண்டுகளுக்கு முன்பு எழுதிவைத்தார்.

அதே போலப் பெரிய வாயும் 12 அங்குல நீளமுள்ள நாக்கும் உள்ள தும்பி ஒன்றை விஞ்ஞானிகள் அதே தீவில் கண்டுள்ளனர். அதன் பெயர் "சாந்தோபன் மோர்கனி பிரீடிக்டா" (Xanthopon Morgani Praedicta). இது ஓர் இரவுப் பறவை.

—நேசனல் ஜியோகிராபிக் (எப் 71)

---

நாம் அனுப்பிய மதத் தலைவர்களின் படங்கள் விண்வெளியில் திரிசங்கு நிலையை அடையாமல்" சந்திரனில் இடம் பெற்றால் அதுவும் சந்திர கிரணத்திற்கு மாருகச் சூரிய கிரணத்தையே காணும்! நாளை பெண் ஒருத்தி சந்திரனுக்கு சென்று அங்கு ஒரு குழந்தையைப் பெற்றால் அக்குழந்தைக்குச் சாதகம் எப்படி கணிப்பது என்பது பற்றிச் சோதிடர்கள் சிந்தித்துக் கொண்டிருக்கின்றனர். அந்தக் குழந்தையின் சாதகத்தில் சந்திர னுக்கு இடமே இராது! ஆனல் அங்கிருந்து பார்த்தால் வானத் தில் தொங்கிக்கொண்டிருக்கும் பூமிக்கும் ஓர் இடம் எப்படியும் கொடுத்தாக வேண்டும்! பூமிக்கோள் நல்ல கோளா? அல்லது கெட்ட கோளா? இதனையும் அவர்கள் முடிவு செய்தாக வேண்டும்! பூமியின் ஆலயத்தின் கர்பக்கிரகத்துள் செல்லும் உரிமையில்லாத காந்தியடிகளும் இருந்தார். கர்பக்கிரகத்திற்குள் கால் வைத்துச் செல்லும் உரிமை கொண்ட கோட்சேயும் இருந்தான். எனவே பூமியை வியாழன் போன்ற நல்ல கோளா கவும் சோதிடர்கள் கொள்ளலாம்; சனி போன்ற கெட்ட கோளாகவும் கொள்ளலாம்.

### பாராட்ட வேண்டிய விளைவு

இவை போன்று புதிய பல செய்திகளை எதிர் கொள்ள நேரிடும் என்பதை அறிந்தே சந்திரனிலிருந்து 'டன்' கணக்கில் கற்களைக் கொண்டு வருவதால் பெரிய எதிர் விளைவுகள் எற்பட லாம்? என்று விண்வெளி ஆராய்ச்சினை விரும்பாதவர்கள் எச்சரிக்கை விடுக்கின்றனர். இவர்கள் உள்ளத்தில் எற்பட்டுள்ள விளைவே பாராட்டுக்குரியதாகும்! இவர்களும் சந்திரன் கல்லாலும் மண்ணாலுமானதோர் உருணடை என்பதை இன்று புரிந்துக் கொண்டனர்! இனிச் சந்திரனின் பரப்பையும் நன்னில மாகக் கண்டு பயனடைய வேண்டியதுதானே! ஆம், நிலத்தின் வளத்தினைத் துய்க்க அறியாது சோம்பி இருப்பாரைச் சுட்டி,

> 'இலமென்று அசை இ இருப்பாரைக் காணின்
> நிலமென்னும் நல்லாள் நகும்'

என்று வள்ளுவர் அன்று மொழிந்தார். இன்று

விண்வெளி ஆராய்ச்சியை மேற்கொள்வதால் எற்படும் விளைவுக் கஞ்சி இருப்பாரைச் சுட்டி

> இலமென்றுச் அசைஇ இருப்பாரைக் காணின்
> நிலவென்னும் நல்லாள் நகும்'

என்று வள்ளுவருள்ளம் அறிவுறுத்துகிறது! வாழ்க வான்வெளி ஆராய்ச்சி! வளர்க விண்வெளிப் பயணம்!!

***

நுட்பச் சொற்றொகை—2

| | |
|---|---|
| Magnetic compass | —காந்தவட்டை, திசைவட்டை |
| Theodolite | —தியோடலைட் |
| ordinate | —ஆயம் |
| Coordinates | —இணைப்பு ஆயங்கள் |
| Clamp | —அள், கிடுக்கி, இறுக்காணி |
| Bearing | —திசையம் |
| Latitude | —நேர்வரை |
| Longitude | —நிரைவரை |
| Accurate | —சரியாக, கருக்காக |
| Survey | —அளக்கை |
| Levelling | —மட்டகை |
| Bench Mark | —அறிமேடை |
| Chain | —சங்கிலி, நீளம் |
| Chainage | —நீளப்பாடு |
| Cross Staff | —குறுக்குக் கம்பம் |
| Levelling Staff | —மட்டகைக் கம்பம் |
| Traverse | —நடக்கை |
| Cadastral Survey | —தீர்வை நில அளக்கை |
| Datum | —அடி மட்டம் |
| Estimate | —குத்து மதிப்பு, மதிப்பீடு |
| Meridian | —மேவரை |
| Number | —எண்ணம், எண்ணிக்கை, |
| Level (கருவி) | —மட்டகி, ரசமட்டம் |

—கொங்கு நுட்பச்சொல் ஆணையம்

# தமிழக வரலாறு

தமிழகத்தின் வரலாற்றை தொகுத்து எழுதும் பெரும் பணியை மதுரைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் டாக்டர் மு. வரதராசனுர் அவர்கள் தலைமையில் ஒரு குழு அமைத்து அதனிடம் ஒப்படைத்துள்ளது தமிழக அரசு. மிக நீண்ட நாட்களாக எதிர் பார்த்த நல்ல பணி இப்போது தொடங்கப் பட்டுள்ளது குறித்து. பெருமகிழ்ச்சி தெரிவித்துக் கொள்கிறோம்.

தமிழகத்தின் எந்த கால கட்டத்தின் வரலாற்றையும் தனி மனிதர்களால் தொகுத்துவிட முடியாது. தற்போது கிடைத்துள்ள பல புதிய சான்றுகளால் அறிஞர்கள் முன்பு எழுதிய நூல்களுக்கு திருத்தங்கள் இன்றியாமையாதன வாயின. வரலாறு பற்றி பல பல கருத்தரங்குகள் நடந்துள்ளது. ஆனல் அவைகள் நூல் வடிவிலோ கட்டுரை வடிவிலோ வராமல் போய் விட்டதால் வரலாற்றுக்குழுவிற்கு அவை கிடைக்க வழியில்லை. தனிப்பட்டோர்எழுதிய எழுத்துரைகளை பாதுகாத்து வைக்க கையேட்டு நூலகங்களும் கிடையாது. இதுபோல் பலரின் பல நாள் உழைப்பு வேண்டும் போது கிடைக்காமல் வீணுகிவிட்டன.

இக்கருத்துகள் வரலாற்று நூலில் இடம் பெற வேண்டுமானல், அல்லது அந்தக் குழுவாவது பரிசீலிக்க வெண்டுமானல் ஒரே வழிதான் உண்டு. அவ்வாறு கட்டுரை எழுதிய ஆசிரியர்களில் உயிரோடு இருப்பவர்கள், தங்கள் கட்டுரைகளின் நகல் இருந்தால் அதை வரலாற்றுக்குழுவிற்கு அனுப்பி வைக்கலாம். நூல் தொகுக்கப் படுமுன் இதைச் செய்யாமல் பின்னர் வரலாற்று நூலைச் குறை சொல்வதால் பயனில்லை.

வரலாற்றுக் குழுவினரும் ஒன்று செய்யலாம். வரலாற்று நூலின் முதற் படி தயாரானதும் அதை ஒரு சில நூலகங்களில் பொது மக்களின் அறிஞர்களின் கருத்தரைகளுக்காகவும் பரிந்துரைகளுக்காகவும் வைக்கலாம். மாற்றுக் கருத்துள்ளவர்கள் அதை எழுத்து மூலம் தெரிவித்தால் அதை ஆராய்ந்து கொள்ளத்தக்கதை ஏற்றுக்கொண்டு மற்றதைக் தள்ளிவிடலாம்.

தமிழக அரசே பொறுப்பேற்று எழுதப்படும் நூலாதலால் இயன்ற அளவு அதில் பிழையோ தவறே ஏற்படாமல் பாதுகாக்கவேண்டியது இந்தத் தலைமுறை மக்களின் தலையாய கடமை ஆகின்றது.

கொடியன்

# பூந்துறை நாடு

கொங்கு மண்டல உட்பிரிவுகளான இருபத்துநான்கு நாடு களின் தலைமை நாடாகப் பூந்துறை நாடு திகழ்ந்து புகழோடு விளங்கியது. காவிரியின் மேல் கரையிலும் கீழ்கரையிலும் பரவி யுள்ளது. அது கீழ்கரை பூந்துறை நாடு என்றும், மேல் கரை பூந் துறைநாடு என்றும் இரண்டாகப் பிரிந்துள்ளது. இதை ஒட்டியுள்ள பருத்திப் பள்ளி நாடும், ஏழூர் நாடும் பூந்துறை நாட்டின் இணை நாடுகள் என்று அழைக்கப் படுகின்றன.

மேல்கரைப் பூந்துறை நாட்டிலுள்ள ஊர்களின்பட்டியல் வருமாறு:

| | |
|---|---|
| பூந்துறை | அறச்சலூர் |
| வெள்ளோடு | விளகேத்தி |
| நசியனூர் | ஈஞ்சம்பள்ளி |
| எழுமாத்தூர் | சத்தியமங்கலம் |
| பிடாரியூர் | சேமூர் |
| ஈங்கூர் | மங்கலம் |
| பெருந்துறை | வீரகநல்லூர் |
| சாத்தம்பூர் | ஈரோடு |
| காளமங்கலம் | பேரோடு |
| கொளாநல்லி | சித்தோடு |
| கிழாம்பாடி | திண்டல்புதூர் |
| மொடக்குறிச்சி | இலவமலை |
| அனுமன் பள்ளி | திருவாச்சி |
| பழமங்கலம் | பனயம்பள்ளி |
| குலவிளக்கு | ஓடாநிலை |
| காகம் | முருங்கத்தொழுவு |

**சென்னிமலை** இந்நாட்டின் மேற்கெல்லை. அது பெருநகராக விளங்கியதால் ஊர்த்தொகையுள் சேர்க்கப்படவில்லை. நற்றிணை (28)யில் பாடப்பட்டுள்ளது. சென்னிக்கோடு என்பது அப்போ தைய பெயர். இந்நாட்டைச் சுற்றிக் கிழக்கே காவிரியும், வடக்கே, பவானியும், தெற்கே நொய்யலும் ஓடுகின்றன.

**பூந்துறை** இந்நாட்டின் தலைநகராக விளங்கியது. புன்றுறை என்று சங்கஇலக்கியங்களில் பயின்று வருகிறது. உப்பிலிய நாயக்கர் நியாய மேடை, பார்சுவநாதர் (சமணக்) கோயில், பௌத்த சமயத்தின் சிதைந்த கோயில் ஒன்று முதலியன வரலாற்றுச் சிறப்புடையன. வாரணவாசி, குப்பர் அழைப்பித்தான் போன்ற புகழ்மிக்க வேளாளர் தலைவர்கள் வாழ்ந்த ஊர் புராணம் குறவஞ்சி, தூது போன்ற பல இலக்கியங்கள் கொண்ட ஊர்.

**வெள்ளோடு** இரண்டாம் தலைநகராக விளங்கியது. கி. பி. 13-ஆம் நூற்றுண்டில் வெட்டப்பட்ட காலிங்கராயன் வாய்க்காலை வெட்டிய காலிங்கராயரின் சொந்த ஊர். அவர் சிலையும் பல கல்வெட்டுகளும், சமணத் தீர்த்தங்கரர் சிலைகளும் இங்குள்ளன.

**நசியனூர்** முன்பு நசையனூர் என்று வழங்கப்பட்டதாகக் கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறோம். "கற்றவர் சூழ் நசையனூர்" என்பது பழம்பாடல்.

---

# வாழ்த்துகின்றனர்

**மாநிலக் கல்லூரி மாணவர் பேரவை**

*அன்புள்ள ஆசிரியருக்கு,*

உண்மையிலேயே "கொங்கு" தமிழ் உலகுக்கு. தமிழ் மக்களுக்கு, தமிழ்வழி கல்வி கற்கும் மாணவ மணிகளுக்கு பெரும் தொண்டு புரிந்து கொண்டிருக்கிறது. கொங்கு பிறந்து சில மாதங்களே ஆனாலும் என்போன்ற இளம் உள்ளங்களை மிகவும் கவர்ந்துள்ளது. அறிவியல் பாடங்களைத் தமிழில் கற்கும் மாணவர்கள் திங்கள் தவறாமல் கொங்கு இதழைப் படித்துப் பயன்பெறுவர் என்பது திண்ணம். கொங்கு சீரும் சிறப்பும் பெற்று தமிழ்த் தொண்டு புரிய என் உளம் கனிந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**ம. ந. சின்னசாமி, துணைத்தலைவர்**

*குறியாக்கிப் பாலுணர்வைக் கூட்டிடுவோர் நாண*
*அறிவியலை ஆரமுதாய் அற்புதமாய் ஆக்கிவிட்ட*
*கொங்கெனமோர் திங்களிதழ் கொண்டுவந்த நற்புலவ*
*பொங்குபுகழ் கொள்வாய் பொலிந்து.*

— கு. முத்துக் கிருட்டினன், அரக்கோணம்.

---

**எழுமாத்தூர்** அருகில் இரண்டு மலைகள் உள்ளன. கனக கிரி என்று அழைக்கப் படுகின்றன. அருணகிரிநாதர் பாடல் பெற்றுள்ளது. அங்கு பொன் கிடைப்பதாகவும் அது ஏழு மாத்துடைய தென்றும் அதனாலேயே அது எழுமாத்தூர் என்று அழைக்கப்படுவதாகவும் சொல்லப்படுகிறது.

**பிடாரியூர்** :அருணகிரிநாதர் சென்னிமலை வேலவனைப் பற்றிப் பாடிய பாடல்கள் இந்த ஊரிலிருந்து பாடியதாகக் கருதப் படுகிறது. அழகிய நடுகற்கள் சில உள்ளன.

ஈங்கூர் (ஈங்கியூர்) "நன்மங்கலஞ் சிறக்க" என்று தொடங்கும் கல்வெட்டுடன் கூடிய ஐயனார் சிலை இங்கு உள்ளது.

**பெருந்துறை**யில் புகழ்மிக்க ராமலிங்கம் காசநோய் மருத்துவமனை உள்ளது.

**சாத்தம்பூர்** காவிரிக் கரையில் உள்ளது, "அநியாயம், அழிபிழை செய்தாரை வெட்டுதல் குத்துதல் செய்தார்க்குத் தண்டம் தலை விலைஇல்லையாவதாக" என்ற அருமையான நீதிக்குறிப்பு உடைய கல்வெட்டு இங்குதான் கிடைத்தது.

**அநுமன்பள்ளி**யில் சேர மன்னன் கோரவிகோதையின் செப்பேடு ஒன்று புலவர் இராசுவால் கண்டுபிடிக்கப்பட்டு சென்னை அரும்பொருட்காட்சி சாலையில் சேர்க்கப்பட்டுள்ளது.

**பழமங்கலம்** முன்பு புகழ் மங்கலம் என்று பெயர் வழங்கியது. இங்குள்ள நடுகல்லில் உள்ள பாடல் கல்வட்டு கொங்கு தை இதழில் வெளிவந்ததை வாசகர்கள் மறந்து இருக்கமாட்டார்கள்.

**காகம்** : சங்ககால பெண்பாற் புலவர் காக்கை பாடினியார் நச்செள்ளையார் இந்த ஊரைச் சேர்ந்தவரே ஆவர்.

**அறச்சலூர்** நாகமலையில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முந்திய இசைக் கல்வெட்டு உள்ளது. தற்போது தமிழ்நாடு தொல்லியல் துறை இதைப் பாதுகாத்து வருகிறது. இம்மலையை ஒட்டிய குட்டிக்கரடே அகம் 159-ஆம் பாடலில் கூறப்பட்ட ஆமூர்த் தலைவன் கொடுமுடியின் குறும்பொறை மலை என்று கருதப்படுகிறது. மலைமேல் தொல்லியல் ஆய்வுக்கான பழம் வட்டக் கட்டிடம் ஒன்று

சிதைந்த நிலையில் உள்ளது. அறச்சலூர் இசைக்கல்வெட்டைக் கண்டு பிடித்து உலகிற்கு காட்டிய பெருமை புலவர் இராசுவையே சேரும்.

**சத்தியமங்கலம்** என்ற இந்த ஊர் மொடவாண்டி சத்திய மங்கலம் என்று அழைக்கப்படுகிறது. கோவையில் உள்ள முடவர் நிலையத்திற்கு இந்த ஊர் தானமாகக் கொடுக்கப்பட்டுள்ளதால் இப்பெயர் பெற்றது.

**திருப்பூர் குமரன்** என்று அழைக்கப்படும் தியாகி குமார சாமி ஒடாநிலை கிராமத்தைச் சேர்ந்தவர்.

**திண்டல்** மலை கொண்ட ஊர். இங்கு வேளாளர் மகளிர் கல்லூரி உள்ளது.

**ஈரோடு** :- இப்பொழுதைய பெருநகரம். நகராட்சி நூற்றாண்டு விழா கொண்டாடி விட்டது. புலவர் இரர்சு அமைத்துள்ள " ஈரோடு வரலாற்றுச் சங்கம் " கொங்கு நாட்டுக் கல்வெட்டுக் கள் பற்றிய முழுத்தகவல்களையும் சேகரித்து வைத்துள்ளது. போதிய பொருள் வளமில்லாதலால் அவை இன்னம் வெளிவர வில்லை.

வரலாற்றுச் செறிவு கொண்டது பூந்துறை நாடு ஆகும்.

## GULF BAY

கடற்கறையிலும், அதற்கு அண்மையிலும் காணப்படும் நிலப்பகுதிகள் கீழே விளக்கப்பட்டுள்ளன.

1. வளைகடல் [Gulf] :- அண்மையிலுள்ள இருகடற் கரை களுக்கிடையில் புகுந்து காணப்படும் கடற்பகுதிக்கு 'வளை கடல்' என்று பெயர்.

எடுத்துக்காட்டு :- மெக்சிகன் வளைகடல்.

2. விரிகடல் [Bay] :- சேய்மையிலுள்ள இருபெரும் கடற் கரைகளுக்கிடையில் விரிந்து பரந்து, அகலமான வாயு டைத்தாக இருக்கும் கடற் பகுதிக்கு 'விரிகடல்' என்று பெயர்.

எடுத்துக்காட்டு :- வங்காள விரிகடல்.

—க. மணிமேகலை

# கடிதம்

அன்புடையீர்,

சென்ற கொங்கு இதழில், "கல்வியையும் ஆராய்ச்சியையும் சிறை செய்து விட்டார்கள்" என்ற தலையங்கத் தொடர் நூற்றுக்கு இருநூறு பங்கு உண்மை.

வானவரம்பன்-கல்வெட்டோடு 'மயிலே' யை மறுத்துள்ளமை பாராட்டத் தக்கது. மருத்துவக் குறிப்பும் சிறப்பானதே.

வேடிக்கை எனும் குறிப்பில் மகிழ்ந்திருக்கிறீர்கள். சென்னைப் பல்கலைக் கழகம் எழுத்துப் பயிற்சியை, கல்வெட்டுப் படிப்புப் பயிற்சியைக் கடுகளவு கூட வற்புறுத்தவில்லை. வாண்டையார் முதலானோரால் அச்சிடப்பட்டு, குறிப்புகளோடு, வினு விடைகளோடு கூடிய சில கல்வெட்டுகள் வரலாற்றோடு இணைக்கப் பட்டுள்ளன. அவ்வளவே,

சிம்ம விட்ணு என்னும் குறிப்பில் சில விடப்பட்டுள்ளன, சில தவருகக் குறிக்கப் பட்டுள்ளன.

1. அவைகளைக் "தொறுபாடிக் கல்வெட்டுக்கள்" என்று அழைக்கவேண்டும். அவற்றுள் ஏழுதான் 'நடுகல் வெட்டுக்கள்'

2. சிம்ம விட்ணு தொடர்பாக இதுவரை கல்வெட்டுக்கள் ஏதும் கிடைக்கவில்லை. பள்ளன் கோயில் செப்புப்பட்டயத்தைத் தவிர, இங்கு முதன் முதலாக அவன் காலக் கல்வெட்டு கிடைத்துள்ளது.

3. ஐம்பத்தொன்பது ஆண்டுகள் ஆண்டான் என்ற குறிப்பைத் தரும் ஐம்பத்தொன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு முதலாம் மகேந்திர வர்மனுக் குரியது. சிம்ம விட்ணுவுக்குரியது அல்ல.

க. ப, அறவாணன்
பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30

நன்றி அறவாணரே! தவறுக்கு வருந்துகிறோம்.

வாசகர்கள் சென்ற இதழில் வந்த செய்தியை மீண்டும் படித்து பிழைகளைத் திருத்திக் கொள்வார்களாக—ஆசிரியர்

# ஆயிரத்தெண்ணூறில் தமிழகம்

புக்கானன்

28 அக்டோபர் 1800.

நான் இன்று எட்டு மலபார் மணி நேரம் பயணம் சென்று கோயமுத்தூரை அடைந்தேன். நான் இதுவரை வந்த வழியை விட கற்களும் பாறைகளும் குறைவாக இருக்கிறது, பூமியில் நல்ல மண் இருக்கிறது. சில வேலிகளும் சில மொட்டை மரங்களும் தான் இருக்கின்றன. டணுயக்கன் கோட்டையிலிருந்து கோயமுத்தூர் சாலையில் நல்ல மரங்கள் நடப்பட்டுள்ளன. ஆனால் அவை நன்ருக வளரவில்லை.

கோயமுத்தூர் தலைவன் வேளாளர் குடும்பத்தைச் சேர்ந்தவன். முதலில் அவன் குடும்பம் மலை அடிவாரத்தில் மலசர் என்ற நாலைந்து குடும்பத்தினர் உடன் வ ழ்ந்து வந்தனர். அங்கு அவர்களுடைய கடவுளான கோனியம்மன் கோவில் இருந்தது இவர்களின் தலைவனின் பெயர் கோயா; கிராமத்தின் பெயர் கோயம் பட்டி. இன்றையத் தலைவனின் முன்னோர் மலசர்களின் அனுமதி பெற்று அந்தக் கிராமத்தில் ஒரு கோட்டையைக் கட்டினராம் விரைவில் அந்த இன மக்கள் இறந்துபோன பிறகு வேளாளர் தலைவன் கனவில் கோனியம்மன் தோன்றி தன் கோவிலைப் பெரிதாகக் கட்டி ஒரு பூசாரியை நியமிக்கும் படியும் கோட்டைக்கார காளியப்பன் என்று பெயர் வைத்துக் கொண்டு, ஊர் பெயரைக் கோயமுத்தூர் என்று அழைத்து அரசாட்சி புரியும் படி வாழ்த்தியது. இதை எனக்குச் சொன்ன தற்போதைய தலைவன் இந்த நகரத்தை நிர்மாணித்தவன் வழியில் 20-வது பட்டத்தைச் சார்ந்தவனும், இந்த குடும்பம் முதலில் மதுரையில் ராஜாவுக்கு கப்பம் கட்டிக் கொண்டு வந்தது. இந்நாட்டை 150 ஆண்டுகளுக்கு முன்பு மைசூர் குடும்பம் கைப்பற்றி கோட்டையை பெரியதாகக் கட்டியது.

கொஞ்ச நாட்களுக்கு முன்பு ஹைதர் ஆட்சி பீடம் ஏறியதும் மதனன் என்ற லிங்கபந்து (கழுத்தில் லிங்கம் கட்டிக் கொள்வோர்) என்பவன் நாற்பது ஆண்டு காலம் ஆட்சி செய்தான். அவன் கட்டிய வீட்டை இந்த ஊர் மக்கள் அரண்மனை என்கிறார்கள். அது அவ்வளவு வசதியானது அல்ல; மண் சுவர்களால் குறுக்கும் நெடுக்கும் அமைந்த ஒரு அசிங்கமான கட்டிடம்; இப்பொழுது குதிரைப் படை பிரிவு ஒன்று தங்கியுள்ளது. மதனன் அரசாங்

கத்தில் இந்த அரண்மனை மிகவும் புகழ்ப் பெற்று இருந்தது பின்னால் வந்த போர்களில் பாதிக்கப் பட்டு காலஞ் சென்ற சுல்தானால் எட்டு ஆண்டுகளுக்கு முன் அழிக்கப்பட்டது.

இந்நகர் ஆங்கிலேயர் வசம் ஆனதும் இங்கு ஒரு குதிரைப் படை அமைந்தது. இந்நகர் விரிவடையத் தொடங்கி தற்போது 2000 வீடுகள் உள்ளன; இது ஹைதர் காலத்தில் இருந்ததில் எட்டில் ஐந்து பங்குதான். இங்கு திப்புசுல்தான் கொஞ்சநாள் வசித்த போது கட்டிய மசூதி ஒன்று உள்ளது; ஆனால் பெரிய கோயில்கள் ஒன்றும் இல்லை. நான் இங்கு வந்தபோது இங்குள்ள ஆங்கிலப் படை அதிகாரிகளால் அன்புடன் வரவேற்கப்பட்டேன் உலகத்திலேயே சென்னை அரசாங்கத்தில் இருந்த ஆங்கிலேய அதிகாரிகள் தான் விருந்தோம்பலில் சிறந்து விளங்கினர்.

## 29, 30, அக்டோபர் 1800

ஒரு நாள் கோயமுத்தூரில் தங்கி சுற்று வட்டாரத்தை கண்டு களித்தேன். 30-ந் தேதி புகழ்பெற்ற பேரூர் கோவில் சென்றேன் இது ஈஸ்வரனுக்கு அர்ப்பணிக்கப்பட்டு மேலைச் சிதம்பரம் என்று அழைக்கப்படுகிறது பாண்டிச்சேரிக்கு பக்கத்தில் உள்ள சிதம்பரத் திற்கும் இதற்கும் வேறுபாடு தெரிவதற்காக இப்படி அழைக் கிறார்கள். இங்குள்ள சாமிசிலை வெகு காலத்திற்கு முன்னால் தானே தோன்றியதாக சொல்கிறார்கள். மதுரை ராஜா 3000 ஆண்டுகளுக்கு முன்னால் கட்டியதாக கூறுகிறார்கள். இங்கு மிக அழகான தேர்கள் நான்கு உள்ளன. இங்குள்ள குளத்தில் படி கள் முழுதும் கருங்கற்களால் கட்டப்பட்டு அழகாக இருந்தது.

இந்தக் கோயில் இந்து முறையில் அழகு படுத்தியிருந்தது. சுதை சிற்பங்கள் அழகில்லாமல் இருந்தன. கருங்கற் சிற்பங்கள் மிகவும் அழகாக இருந்தன. கட்டுவதற்காக செதுக்கப்பட்ட சில தூண்கள் முடிவுபெறாமல் அப்படியே கிடந்தன. அந்தக் கற்களின் புதிய தன்மையைப் பார்க்கும் பொது கோயில் பிராமணர்கள் சொன்ன காலம் பொருந்துவதாக தெரியவில்லை. இந்தக் கோயில் பிராமணர்களுக்கு நிறைய மான்யம் இருந்தது. திப்பு காலத்தில் அவற்றைப் பறித்துக் கொண்டு நகைகளையும் எடுத்துச் சென்று விட்டானும். ஆனாலும் இந்துக் கோயில்களை எல்லாம் இடிக்க உத்திரவிட்ட போது இந்தக் கோயில், சீரங்கப்பட்டணம் கோயில், மேலக் கோட்டை கோயில் மூன்றுக்கும் விதி விலக்கு

அளித்தானும். ஆனாலும் இந்த உத்திரவு நிறைவேற்றப்படவே இல்லை. தானே நேரில் நின்று இடித்து மகிழ்ச்சி அடைத்த ஒரு சில கோயில்களைத் தவிர மீதி ஒன்றும் இடிபடவில்லை.

இது மிஸ்டர் ஹாடீஸின் மாவட்டத்தில் இருக்கிறது அவர் ஒழுங்கான பூசைக்கு வேண்டிய நிதி ஒதுக்கி இருக்கிறார் ; அது போதாதென்று இந்த பிராமணர்கள் கத்துகிறார்கள். திப்பு சுல்தான் காலத்தில் கூட இந்தக் கோயிலில் பூஜை தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. அப்போதும் பூசை ஒரு வேளை கூட நிற்கவில்லை.

(தொடரும்)

ஆய்வு மேடை

# கொங்கு மண்டல சதகம்

கொங்கு மண்டலத்திற்கு மூன்று சதகங்கள் உண்டு என்று முன்னர் ஓர் இதழில் குறிப்பிட்டிருந்தோம். அவற்றுள் கார் மேகக் கோன் பாடிய சதகத்தை சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்னமே திருச்செங்கொடு முத்துச்சாமிக்கோனார் அவர்கள் வெளியிட்டுள்ளார்கள். தற்போது வாலசுந்தரக் கவிராயர் இயற்றிய கொங்கு மண்டல சதகத்தை பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி வெளியிட்டுள்ளது. விலை இரண்டு ரூபாய்தான்.

வாலசுந்தரக் கவிராயர் சதகத்தில் ஒரு தலையாய செய்தி என்ன வென்றால் அது கம்பரின் சமகாலத்தில் பாடப்பட்டதாகத் தெரிவதுதான். கம்பரை ஆதரித்த திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல் இந்த வாலசுந்தரக் கவியராயரையும் ஆதரித்ததாகத் தெரிகிறது. காலத்தால் 800 ஆண்டுகளுக்கு முன்னர் பாடப்பட்டதால் வரலாற்றுக்குச் சற்று உதவிகரமாக இருக்கும் என்று தோன்றுகிறது. நல்லவேளை கம்பரை ஆதரித்த சடையப்பரின் ஊர் நடுநாட்டு திருவெண்ணெய் நல்லூர்தான் என்று உரை எழுதிய வே. ர. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் எழுதியுள்ளார். கருருக்குக் பக்கத்தில் உள்ள வெண்ணைமலையை ஒட்டியுள்ள நல்லூர் என்று கூறவில்லை. இந்த நல்லூர் ஆர்நாட்டாமலைச் சேரர் கல்வெட்டிலும் பொறிக்கப்பட்டுள்ளது. வரலாற்றில் ஆர்வமுள்ள இளைஞர்கள் இனி அதற்கு ஆதாரம் தேடுவார்களாக.

# கொங்கு

அறிவியல் வரலாற்றுத் திங்களிதழ்.

---

ஓரிதழ் 25 காசு ஆண்டுச் சந்தா ரூ 3/-

1. அஞ்சலில் அனுப்புவோர், அஞ்சற்கட்டணத்தைக் குறைத்துக் கொண்டு அனுப்பலாம்.

2. அஞ்சல்தாளில் அடியில் அனுப்புவோர் முகவரி எழுத வேண்டும்.

3. ஊராட்சி ஒன்றியங்களுக்கு வாங்குவதற்கான கிராம வளர்ச்சி இயக்குநர் ஆணை மூ. மு. எண் 15850-71 கே 3 நாள் 17-2-71.

4. திருக்கோயில் நூலகங்களுக்கு வாங்குவதற்கான இந்து அற நிலைய ஆணையாளர் உத்தரவு எண் : கே. டிஸ் 38571/71 நாள் 27-7-71.

5. பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் நூல்கள் வாங்குவதற்கு அந்தந்த தலைமை ஆசிரியர்களுக்கும், முதல்வர்களுக்கும் அதிகாரம் உண்டு என பள்ளிக் கல்வி, கல்லூரிக் கல்வி இயக்குநர்கள் தெரிவித்துள்ளனர்.

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

நிர்வாகி, கொங்கு 26, இந்திரா நகர், சென்னை-20